VOL. LXXVII. No. 9. SEPTEMBER 1940.

# அருணோதயம்

# ARUNODAYAM

THE

## TAMIL EVANGELICAL LUTHERAN JOURNAL

Published by the Church of Sweden Mission,
the Tamil Evang. Lutheran Church and the Danish Mission

நித்திரையைவிட்டு எழுந்திருக்க வேளையாயிற்று.
ரோமர் 13 : 11.

பொருள் அட்டவணை.



PRINTED AT
JEGAM & Co., DODSON PRESS,
TEPPAKULAM, TRICHY.

1940

**Reminder**:—We have not received the 1940 Arunodayam dues (also for 1939) from a few. Please send the same without further delay.

அருணோதய சந்தா பாக்கித் தொகையை உடனே அனுப்புங்கள்.

Clock Tower, Trichy.

S. **Gnanamanickam,**
*Editor, Arunodayam*

---

தேவை :—பழைய ஏற்பாட்டு திருச் சரித்திரங்கள் (by Ellwein) 60 பிரதிகள் மதுரை U. C. High School மாணவர்களுக்குத் தேவை. நமது சேகரங்களின் புஸ்தக சாலைத் தலைவர்கள் தாங்கள் விற்கக்கூடிய புத்தகங்கள் எத்தனை என்பதை மதுரை, அரசரடியிலிருக்கும் U. C. High School மானேஜருக்குத் தெரிவிக்கவும்.

---

## J. C. Notification

சிதம்பரம், சீயாழி, மாயவரம், பொறையார், கும்பகோணம், பாண்டூர் முதலிய இடங்களில் வேதாகம ஸ்திரீயாக வேலை செய்து 11—5—1939இல் பாண்டூரில் தனது 53ம் வயதில் மரித்த மாஜி தரங்கை ஓபேத் உபாத்தியாயரின் குமாரத்தியும், மாஜி D. S. சீமயோன் உபாத்தியாயரின் மனைவியுமாகிய ஞானதீபம் அம்மாள் தன்னுடைய பிராவிடென்ட் பண்டு தொகையைப் பெற்றுக்கொள்ள வாரீசு ஒருவரையும் குறிப்பிடாததால், அதைப் பெற்றுக்கொள்ள பாத்தியதையுடையவர்கள் தங்கள் பாத்தியதையை ரூபிக்கும் Succession certificate அல்லது வேறு ரூபகாரங்களுடன் இதன் முடிவான ஒழுங்கைச் செய்ய ஏற்படுத்தியிருக்கும் பஞ்சாயத்தாரின் தலைவராகிய தஞ்சாவூர் லுத்தரன் சபைகுரு சங். P. மாணிக்கம் ஐயரவர்களுக்கு மனுச் செய்துகொள்ளவேண்டியது.

Madras Christian College, Tambaram, 23-4-1940.

J. D. ASIRVADAM,
*Secretary, Joint Council*




தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் பத்திரிகை

Edited by Rev. S. GNANAMANICKAM, &

Mr. G. T. WILLIAMS, B. A., L. T.

| No. 9 | செப்டெம்பர் | 1940 |
|---|---|---|

## தியானம்

தான் போகுமிடம் இன்னதென்று அறியாமலே போனான். எபிரேயர் 11 : 8.

ஆபிரகாம் இவ்வாறு செய்தான். அவன் அச்சமயம் ஆண்டவரைப் பற்றி அறிந்தது மிகவும் சொஞ்சம்தான். என்றாலும் அவன் அவருக்கு முற்றிலும் கீழ்ப்படிய ஆயத்தமாயிருந்தான். தான் போகுமிடம் இன்னதென்று அறியாமலே போனான்.

நாம் இவ்வாறு முன்னேறுகிறோமா? ஆண்டவர் நம்மை என்ன செய்யச் சொல்லுகிறாரென்பதை அறிந்து அதற்குக் கீழ்ப்படிகிறோமா? ஆண்டவருடைய யோசனை எனக்குப்பூரணமாய் விளங்கவில்லை, ஆதலால் எனக்கு நியாயமென்று தோன்றுகிற பாதையிலே போகிறேன் என்று சொல்லுகிறோமா?

ஆபிரகாம் புறப்பட்டுப் போகும்போது அவனை நோக்கி: நீ எங்கே போகிறாய் என்று மற்றவர்கள் கேட்கையில் அவன் என்ன பதில் சொல்லியிருப்பான்? எனக்குத்தெரியாது என்று அவன் சொல்லிப் பிறர் பார்வையில் பைத்தியக்காரன் போல் தோன்றியிருப்பான். விசுவாசத்தின் பாதை பைத்தியக்காரன் பாதை போலவே தோன்றும். தகப்பனின் கையைப் பிடித்துக் கொண்டுபோகும் பிள்ளைபோல் கர்த்தருடைய பிள்ளைகள் பரம தகப்பன் நடத்தும் பாதையில் நம்பிக்கையோடு முன்னேறு

கிறார்கள். தாங்கள் பெரிய காரியங்களைச் செய்து முடிக்கப் போகிறோமென்று எதிர்பார்க்காமல், வல்லமையுள்ள பிதா தமது சித்தப்படியே தங்களை உபயோகிக்க முற்றிலும் இடங் கொடுக்கிறார்கள்.

ஆண்டவர் என்ன செய்யப்போகிறார் என்று அறிந்து கொள்ள நீ பிரயாசப்பட்டாயா? அவர் அதை உனக்குச் சொல்லமாட்டார். ஆயினும் அவர் எப்படிப்பட்டவர் என்பதைப் படிப்படியாய் நீ அறிந்துணர வழிநடத்துவார். ஒருவராய் அதிசயங்களைச் செய்கிற மகத்துவமானவரை அறிந்துகொண்டு, அவருக்கே சரணாகதியென்று நீ உன்னை ஒப்புக்கொடுத்து, உலகத்தாரின் பேச்சை சட்டை பண்ணாமல் முன்னேறுகையில் உனக்குக் குறைவொன்றுமில்லை. நாளைய தினத்தைப்பற்றி நீ வீண் கவலை கொள்ள நியாயமிராது. ஆண்டவர் உன்னோடு போகிறாரென்கிற நிச்சயமிருக்கும்போது நீ எப்படி கவலைக்கிடங் கொடுக்கலாம்?

அனுதினமும் தேவ வசனத்தை ஜெப சிந்தையோடு தியானித்து, ஆண்டவருடைய உத்தரவைப் பெற்று எக்காரியத்தையும் செய்பவனே தேவபிள்ளை. நீ அனுதினமும் அமைதியிலே சற்று நேரத்தைச் செலவிட்டு, ஆண்டவர் உன் செவிகளில் என்ன சொல்லுகிறாரென்பதை அறியக் காத்திருக்கிறாயா?

கஷ்டம், துன்பம், நிந்தை வரும்போது நீ ஆண்டவரின் சத்தத்தைக் கேட்காமல் உன் புத்தி சொல்லுகிற பாதையிலே ஓடுகிறாயா?

"தன்னிச்சையான அறிவு - நரரை மோசம் போக்குது
அகந்தையுள்ள புத்திமான் — எத்திக்கிலும் இடறுவான்"

சபையின் சுயாதீனத்தைப்பற்றிப் பேசுவோரில் பலர் கடவுளின் சத்தத்தைக் கேளாமலும், ஜெபத்தில் அவருக்குக் காத்திராமலும், தங்களிடம் அபிப்பிராய பேதமுள்ளவர்களுக்குத் தீங்கிழைத்தும், முன்னேறப் பார்த்தால் ஆண்டவர் அவர்களை வெட்கப்படுத்துவார். விசுவாச ஜீவியம் இறுமாப்புகொள்ளாது.

நாம் தாழ்மையின் பாதையில், மனச்சோர்வின்றி, தேவ சத்தத்திற்குக் கீழ்ப்படிந்து முன்னேற ஆண்டவர் அருள் புரிவாராக.

———:———

## குருமார் ஐவரின் வெள்ளி ஜூபிலி

கருணாநிதியின் கிருபாகடாக்ஷத்தால் தமிழ் லுத்தரன் திருச்சபையில் உழைத்துவரும் சுதேச குருமாரில் ஐவர் தாங்கள் குருப்பட்டம் பெற்று 25 வருட ஊழியத்தை முடிப்பதை நினைவுகூரும் வெள்ளி ஜூபிலி வைபவத்தை சமீபத்தில் கொண்டாடுவார்கள்.



| | | பட்டம் பெற்ற தேதி |
|---|---|---|
| 1. | சங்கை S. ஞானமாணிக்கம் ஐயர் | 21— 9—15 |
| 2. | ,, S. A. அப்பாத்துரை ஐயர் | 3—10—15 |
| 3. | ,, D. S. பிச்சை ஐயர் | 3—10—15 |
| 4. | ,, P. மாணிக்கம் ஐயர் | 3—10—15 |
| 5. | ,, A. P. சாமுவேல் ஐயர் | 3—10—15 |

திருச்சபையின் ஊழியத்தில், 'பகலின் பாரத்தையும் வெயிலையும்' இவர்கள் சகித்தார்கள் என்று ஒருவாறு சொல்லலாம். சென்ற ஐரோப்பிய யுத்தம் காரணமாக, கர்மானிய மிஷியோனரிகள் சுயதேசம் ஏகிடவே, இரட்டிப்பான வேலையும் உத்தரவாதமும் இந்திய குருக்கள் பொறுப்பில் விழுந்தது. பாரமான வேலை திராட்சத்தோட்டத்தில் செய்ததின் நிமித்தம் அகால மரணமடைந்த உடன் தோழர் உண்டு; ஜீவிய காலமெல்லாம் பலவீனப்பட்டுப்போன உடன் சகோதரர் உண்டு.

இரக்கமுள்ள ஆண்டவர், இவ்வைந்து சகோதரரையும் அவர்களது குடும்பங்களையும் ஆச்சரியமான பிரகாரம் இம்மட்டும் வழிநடத்திக் காப்பாற்றி, நமது சபைகளுக்கு ஆசீர்வாதம் வழிந்தோடும் வாய்க்கால்களாக உபயோகித்ததை நன்றியோடு நினைவுகூர்ந்து, 'கர்த்தர் நம்மிடத்தில் பெரிதானவைகளைச் செய்தார். இதினிமித்தம் மகிழ்ந்திருக்கிறோம்' (சங். 126,3) என்று சங்கீதக்காரனோடு கடவுளைத் துதிப்போமாக. இவர்களது ஜீவிய வரலாற்றை மிகச் சுருக்கமாக கீழே வரைந்துள்ளோம்:—

சங்கை S. ஞானமாணிக்கம் ஐயர். இவர் மாஜி சங்கை ஞா. சாமுவேல் ஐயரின் மூன்றும் புதல்வர். 1882ம் வருடம் செப்டம்பர் மாதம் 15ம் தேதி தரங்கன்பாடியில் பிறந்தார். தரங்கை Central High Schoolல் இரண்டாம்பாரம் படிக்கும் பொழுதே மாஜி சங்கை. Zehme ஐயரிடம் Elocution prizeம், ஒரு சமயம் பிரம்படியும் பெறும் சிலாக்கியம் கிடைத்ததாம். சென்னையில் இருந்த Church of Scotland Mission காலேஜில் Matriculation பரீட்சையும், School of Musicல் சர்க்கார் சங்கீதவாத்திய பரீட்சையும் தேறினர். புரசை லுத்தரன் வாலிபர் பைபிள் யூனியனில் 5 வருஷம் கின்னரம் வாசித்து, சங்கீத கோஷ்டிகளை நடத்தினர். தரங்கையில் 1903 வருஷம் செமிநேரிமுடித்து அச்செமிநேரியிலேயே ஆசிரியராகவும், மாணவர் விடுதியின் Warden ஆகவும், புது எருசலேம்

ஆல்பக் கிண்ணுரக்காரராகவும் வேலையில் அமர்ந்தார். தரங்கை மிசியோன் இரண்டாம் சதோற்சவத்திற்காகப் பாடகரை ஆயத்தம் செய்யும் சிலாக்கியம் இவருக்குக் கிடைத்தது. சங்கை Zehme சாஸ்திரியாரால் நடத்தப்பட்ட வேதசாஸ்திர வகுப்பில் நான்கு வருடம் பயின்று (1910—1913) கர்மானிய கிரேக்க பாஷைகளிலும் தேர்ச்சிபெற்ருர். பின் கழுதிக்குப் பிரசங்கியாராக மாற்றப்பட்டு, அங்கே திருப்பணி செய்துவந்த சங்கை A. B. Johansson ஐயரோடு, பல கஷ்டமான ப்பிரயாணங்கள் செய்து சுவிசேஷ ஊழிய முறைகளைப் பயிலவும், ஞானஸ்னுன ஆயத்தக்காரர் பலருக்குப் போதனை செய்து ஞானதீட்சை செய்யவும் சலாக்கியம் பெற்ருர்.

சுவேதன் பிரதம அத்தியக்ஷரின் உத்தரவுபெற்று, சங்கை மாஜி C. J. சாந்தகிரீன் சாஸ்திரியாரவர்கள் இவருக்கு 1915ம் வருஷம் செப்டம்பர் மீ 21ம் தேதி மதுரையில் குருப்பட்டம் அளித்தனர். பட்டாபிஷேக பிரசங்க வாக்கியம் லூக்கா 12, 42. அதேவருடம், விருதுப்பட்டிக்கு மாற்றலாகி, கனம் J. சாந்தகிரின், கார்ல் சாந்தகிரின் ஐயர்மாரின் மேல் விசாரணையில் கிராமம் கிராமமாகச் சுற்றித்திரிந்து சுவிசேஷ ஊழியம் ஊக்கத்துடன் புரிந்து பலரை ஞானஸ்னுனத்துக்காக ஆயத்தம் செய்தார். பிறகு, தரங்கை செமிநேரிக்குப் போதனுசிரியராக மாற்றப்பட்டு காரைக்கால் சபை குருவாகவும், அடுத்தாற்போல் ஐந்துவருட காலம் சீர்காழி குருசேகரத்திற்குக் குருவாகவும், ஷெ உயர்தர பாடசாலை மாணவர் விடுதியின் (High School Hostel) மானேஜராகவும் இருந்து அதே சமயம் மணல் மேட்டுச் சபையையும் கண்காணித்து வந்தார். சீர்காழியில் Gospel Volunteers' Band ஓடு சுவிசேஷபடை முயற்சிகளை சித்தியுடன் நடத்தி சுவிசேஷ ஊழியம் ஒழுங்காக நடைபெற கருத்தாயிருந்தார். பிற்பாடு, மதுரை உபதேசிமார் வகுப்பிற்கு ஆசிரியராகவும், ஷெ உயர்தர பாடசாலை மாணவர்விடுதி மானேஜராகவும், ஷெ இரட்சண்ய ஆலயத்தில் சங்கீதப் பயிற்சி ஆசிரியராகவும் பயனுற உழைத்தார். பின்னர், விருதுநகர், திருச்சுழி, புதுக்கோட்டை, திருப்பத்தூர் முதலிய இடங்களில் தெய்வதிருப்பணியைச் சோர்வின்றி தளரா முயற்சியுடன் நடத்தினர். அப்பால் ஓர் வருஷம் திருச்சி செமிநேரி போதனுசிரியராகவும், அதே சமயத்தில் பொன்மலை குருவாகவும் வேலை பார்த்து, தற்போது திருச்சி சீயோன் ஆலய சபைகுருவாக உழைத்து வருகிருர். 1934-ம் வருஷத்திலிருந்து, அருணேதய ஆசிரியராக அவர் புரிந்துவரும் நல்லூழியம் யாவரும் நன்கறிவோம்.



இவர் மாஜி தலைமை உபாத்தியாயர் A. பாக்கியநாதபிள்ளையின் குமாரத்தி செள. மாருள்நகோமி அம்மாளை 1907-ம் ஞூ அக்டோபர்-மீ 21உ மணம்புரிந்தவர். தற்சமயம் இவருக்கு ஒன்பது புத்திர பாக்கியங்கள் உண்டு. 'நான் வீணுக ஓடினதும் வீணுக உழைத்ததும் இல்லை என்கிற மகிழ்ச்சி எனக்குக் கிறிஸ்துவின் நாளில் உண்டாக இதெல்லாம் ஏதுவாகும்' (பிலி, 2. 16) என்கிற வேதவசனத்தால் நம்ஜ-பிலிவாழ்த்து தலை இவருக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேம்.

சங்கை I. A. அப்பாத்துரை ஐயர். இவர் 1883-ம் ஞூ ஏப்பிரல்-மீ 11-உ திருச்சி ஜில்லாவைச் சேர்ந்த விரகாலூரில் பிறந்தார். திருச்சி, தஞ்சை, சீர்காழி, முதலிய இடங்களிற் கல்வி பயின்று, தரங்கை செமிநேரியிலும் பசுமலைப்போதனுமுறை பாடசாலையிலும் பயிற்சி பெற்றுத் தேறினர். பொறையாரில் இருவருடங்கள் ஆசிரியராகவேலைசெய்தபின், 1910—13 வரை தரங்கை வேத சாஸ்திர வகுப்பிற் படித்து வெளியேறி, 1914-லிருந்து சென்னையில் பிரசங்கியாராக தெய்வ ஊழியம் புரிந்தார்.

இச்சென்னைவாசம், இவர்தன் பிரசங்கங்களை மிகுந்த ஆராய்ச்சியோடு ஆயத்தம் பண்ணி வசனத்தின் ஊழியத்தைக் கல்விமான்கள் முன்னிலையில் ஊக்கத்துடன் செய்வதற்கான பயிற்சியை இவருக்கு அளித்தது. சென்னையில் இவர் புரிந்த சேவை, இவருக்கு ஓர்வித சுயேச்சை நாட்டத்தைக் கொடுத்ததோடுகூட, மாயவரம், சிதம்பரம் முதலிய பாஸ்றரேற்றுகளில் இவர் திருப்பணி நடத்துங்கால் பலதுறைகளில், விசேஷ வேலையில் சுய முயற்சிகள் எடுத்து, ஷெ குருசேகர ஊழியத்தை விர்த்தி செய்தனர். பிறகு இருபதுவருடங்களாக(1919—1939) இவர் மதுரையிலும் புரசவாக்கத்திலும் சபை குருவாக பயனுற உழைத்தார். கோவில் பணம், கணக்குகள் முதலியவைகளை இவர் தன்கையில் ஒரு போதும் வைத்துக் கொள்வதில்லை. மதுரையில் சபைப்பொக்கிஷ வீட்டு வாடகை இவர் காலத்தில் மாத வருமானம், ரூபாய் ஒன்றிலிருந்து ரூ. 130-க்கு விர்த்தியாக்கப்பட்டது. அன்றியும் சென்னையிலுள்ள அடைக்கலநாதர் ஆலயக் கட்டடத்தை அலங்காரமாக விஸ்தீரணப்படுத்திக் கட்டினதும் இவரது அரும் பிரயாசையே.

மற்றவர்களைவிட தான் உயர் நிலையில் இருக்கவேண்டும் என்னும் எண்ணம் இவருக்குக் கிஞ்சித்தேனும் இல்லையெனினும், கடவுளின் அதிசயமான நடத்துதலின்படி, இவரது வாலிபப்பிராயத்திலேயே இவர் மிசியோன் சங்கத்தின் முதல்இந்திய குரு அங்கத்தினராகவும், மும்முறை ஆலோசனை சங்க அவயவ

மாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஐரோப்பா கண்டத்திற்கு லுத்தரன் ஸ்தானாதிபதியாகச் சென்ற முதல் இந்திய குருவும் இவரே. கனம் அப்பாத்துரை ஐயர் சற்று சுயேச்சை ஆவி உடையவராயினும், சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்பட்டு, சங்கங்களிலும் மேலானவர்களிடத்தும் கண்யமுள்ளவராகவே விளங்குகின்றார். தற்போது தமிழ் சுவிசேஷ லுத்தரன் திருச்சபையின் தலைவராக விருக்கவும், அதை இவ்யுத்த காலத்தில் கண்காணித்து நடத்தி வரவும் விசேஷித்த சிலாக்கியத்தையும் உக்கிராணத்தையும் கடவுள் இவரிடம் ஒப்புவித்திருக்கின்றார். எல்லாம் வல்ல இறைவன் இவருக்குப் போர்ந்த ஞானத்தையும் ஆவியின் வரப்பிரசாதங்களையும் அருளிச் செய்வாராக.

இவர் 1907-ம் வருஷம் செள. மேரிஅம்மாளை விவாகம் செய்துதற்சமயம் ஆறு பிள்ளைகளைப் பாக்கியங்களாகப் பெற்றிருக்கிறார். நம்முடைய கிருபை உனக்குப் போதும்; ஏனென்றால் பலவீனத்திலே நம்முடைய பெலன் நிறைவேறுகிறது (2 கொரி 12, 9) என்கிற திருவாக்கை இவருக்கு ஜுபிலிவாழ்த்துதலாக சமர்ப்பித்துக் கொள்ளுகிறோம்.

சங்கை D. சாமுவேல்பிச்சை ஐயர் இவர் 1883-ம் வருஷம் அக்டோபர்-மீ 22-உ சென்னையிற் பிறந்தார். இவருக்கு முந்திப் பிறந்த குழந்தை இறந்துபோக, இவரது பெற்றோரின் விண்ணப்பத்தின் பயனாக இவர் பிறந்தமையால், இவருக்குப் பிச்சை சாமுவேல் என்ற பெயர் ஓர்விதமாய் காரண இடு குறிப் பெயராயிற்று. இவர் சீர்காழியில் உள்ள நமது உடர்தரப்பாடசாலையில் பயின்றார். சங்கை பிரோலிக், சேமே, தகப்பன் சாந்தகிரின் சாஸ்திரிமார் தங்கள் போதகத்தினாலும் சாதகத்தினாலும் இவரது வாலிபப் பிராயத்தில் இவருக்குச் சிறந்த வழிகாட்டிகளாய் விளங்கினார்கள். சென்னையிலுள்ள Prayer Union சீர்காழியிலுள்ள Gospel Volunteers' Band ஆகிய கூட்டங்களுக்கு இவர் மிகவும் கடமைப்பட்டுள்ளார். பசுமலையில் போதனாமுறை பயிற்சி பெற்று, தரங்கையிலுள்ள போதனாமுறைப் பாடசாலையில் ஆசிரியராக முதன்முதல் அமர்ந்தார். அன்றியும் அவர் இங்கு போர்டிங்குக்கும் செமினேரிக்கும் Warden ஆக இருந்தது, பிற்காலத்தில் இவர் வாலிபருக்குள் செய்த ஊழியத்திற்கு மிகுந்த பிரயோஜனம் அளித்தது.

இவர் 1914-ல் சங்கை, சேமே சாஸ்திரியாரிடம் வேத சாஸ்திர பயிற்சி முடித்து, தஞ்சைக்குப் பிரசங்கியாராக அனுப்பப்பட்டார். பின்பு திருச்சிக்கு மாற்றப்பட்டு, சங்கை. ஹொய்மன் அத்தியக்ஷரோடு வேலை செய்து, அங்கிருந்து திண்டுக்கல் சபைக்கு குருவாகி, அங்கு ஒரு போர்டிங் பாடசாலையை புதி



தாக ஸ்தாபித்தார். கனம். ஹிம்மல்ஸ்திராண்டு ஐயருடன் கள்ளர் சீர்திருத்த ஊழியத்தில் (Kallar Reclamation work) அரும்பிரயாசப்பட்டார். பின்னர் திரும்பவும் திருச்சிக்கு மாற்றலாகி, திருச்சி சபையை 'A' class pastorate ஆக்க மிகவும் முயன்றுள்ளார். அச்சமயம் அங்குள்ள பள்ளிக்கூடத்தை உயர்தர எலிமெண்டரி பாடசாலை ஆக்குவதிலும், சபையின் வருமானத்தை அதிகப்படுத்த பல கடைகள் கட்டுவதிலும் மிக்க பிரயாசை எடுத்தனர். திருச்சியிலுள்ள சபை குருவின் வீடும் போர்டிங் மாணவரின் விடுதியும், கிராப்பட்டி ஆலயமும் சங்கை பிச்சை ஐயரின் முயற்சியின் பலன்களேயாம்.

1931-ம் வருஷம் இவர் மாயவரத்திற்கு மாற்றப்பட்டு பற்பல கிராமசபைகளில் பயனுற உழைத்தார். அங்கிருந்து 1939ம் வருஷம் சென்னைக்கு அழைப்புப் பெற்று அச்சபையைக் கண்காணித்து நடத்தி வருகிறார். ஏறக்குறைய பன்னிரண்டு வருடங்களாக தமிழ் சுவிசேஷ லுத்தரன் சபை ஆலோசனை சங்க அவயவமாகவும் சிலகாலம் L. E. L. M. மிசியோன் சங்கத்தில் மெம்பராகவும் தொண்டாற்றி வந்தனர்.

இவர் 1909-ம் வருஷம் செள. பாக்கியம் அம்மாளை மணம் புரிந்தவர். கடவுள் இவருக்கு பத்து புத்திர பாக்கியங்களை அளித்து ஆசீர்வதித்திருக்கிறார். 'என்ஜீவனுள்ள நாளெல்லாம் நன்மையும், கிருபையும் என்னைத் தொடரும்; நான் யெகோவாவின் வீட்டிலே சதாகாலமும் நிலைத்திருப்பேன்' (சங். 23, 6) என்ற சங்கீத வசனத்தைக்கொண்டு இவரது ஜுபிலியில் இவரை வாழ்த்துகிறோம்.

சங்கை P. மாணிக்கம் ஐயர் இவர் திருச்சி ஜில்லாவைச் சேர்ந்த ரெட்டியார் துரையூரில் 1880-ம் வருஷம் ஜுன்-மீ பிறந்தார். இவரின் தந்தையார், ரோமன் சபையிலிருந்து தஞ்சையிலிருந்த நமது லுத்தரன் சபையில் சேர்ந்தவர். கனம் ஐயர் சீர்காழியிலுள்ள நமது உயர்தர பாடசாலையிற் பயின்று, 1903ம் வருடம் செமினேரியிற் படித்துத் திண்டுக்கல்லுக்கு மாற்றப்பட்டார். சிறிது காலத்திற்குப்பின் இவர் போடினாய்க்கனூருக்குத் தலைமை உபாத்தியாயராகப் போக சங்கத்தார் உத்தரவிட்டனர். இவ்விடத்தில் இவரது மனைவியார் விஷபேதியினாலும், ஐயரவர்கள் மலேரியாக் காய்ச்சலினாலும் மிக்க கஷ்டப்பட்டனர். தெய்வகரம் ஆச்சரியமாக அவர்களைத் தப்புவித்தது. பிறகு திண்டுக்கல் பாடசாலைக்குத் தலைமை உபாத்தியாயராக மாற்றப்பட்டு ஒரு வருடம் அங்கு உழைத்தபின் 1910-ல் வேத சாஸ்திர வகுப்பிற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். பயிற்சி

முடித்ததும் 1914-ம் ஆூ திரும்பவும் திண்டுக்கல்லுக்கே பிரசங்கியாராக வந்து சேர்ந்தனர். இக்காலத்தில் அநேகர் ரோமன் சபையிலிருந்து நமது சபையிற்சேர இவர் விசேஷித்த கருவியாயிருந்தார்.

1915-ம் ஆூ குருப்பட்டம் பெற்று, கும்பகோணத்திற்கு மாற்றலாகி சபையோரைக் கொடுப்பதில் பழக்குவதிலும் குடிப்பதிலிருந்து விலக்குவதிலும் மிகுந்த சிரத்தை எடுத்துக்கொண்டார். பின்னர், சங்கை ஹொப்மன் அத்தியக்ஷரின் அழைப்புப் பெற்று, பரமகுடியில் மறவர் நடுவில் ஆத்தும ஆதாய வேலை செய்ய சிரத்தையுடன் ஆரம்பித்தனர். அங்குள்ள மறவரில் ஒரு பகுதியார் இவரைத் தங்கள் உறவினராக ஏற்றுக்கொண்டது இவருக்குத் தன் வேலையில் மிகுதியும் அனுகூலமாக விருந்தது. அங்கே 1918-ம் ஆூ பயங்கரமான பெரிய அம்மை நோயினால் பீடிக்கப்பட்டு, மதுரை ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று, ஷ டி வருஷம் ஜூலை மாதம் 31ம் தேதி டாக்டர்கள் அபிப்பிராயப்படி இறந்துபோயிருக்கவேண்டியவர் அதிசயமாக உயிர் தப்பிப் பிழைத்தார். அப்போது டாக்டர் சொன்ன வார்த்தை 'நான் ஒருபோதும் இப்படிப்பட்ட அற்புதத்தைக் கண்டதில்லை' கடவுள் உங்களை ஒரு விசேஷித்த வேலைக்கென்று பிழைப்பூட்டினார் என்றார். மேலானவர்கள் சாந்தகிரின் அத்தியக்ஷர் ஆலோசனைப்படி சங்கத்தார் மறுபடியும் இவரைப் பரமகுடிக்கே அனுப்பினார்கள். ஊழியத்திற்கு வேண்டிய சுகத்தையும் பெலனையும் கர்த்தர் இவருக்கு அளித்து கூட்டம் கூட்டமாக சபைகளைச் சேர்க்கும் சிலாக்கியம் பெற்றார். இருபத்திரண்டு வருடங்கள் பரமகுடி வட்டத்தில் பாடுபட்டு உழைத்தார். ஒரு சமயம் ஒரே நாளில் 168 பேர் ஞானஸ்நானம் பெற்றதுண்டு. ஒரே வட்டமாயிருந்த பரமகுடி குருசேகரம், பரமகுடி, முதுகுளத்தூர், சாலைக்கிராமம் என்ற மூன்று சேகரங்களாயிற்று. பரமகுடியிலிருந்து 1939ம் ஆூ தஞ்சைக்கு மாற்றப்பட்டார். சென்ற ஜூன் மீ இவரது 60ம் வயது முடிந்ததால் பென்ஷன் பெற்றும், இன்னும் சமாதானத்தோடு ஊழியம் செய்து வருகிறார்.

இவர் 1903ம் ஆூ சௌ. அற்புதம் அம்மாளை விவாகம் செய்து, தற்போது ஐந்து பிள்ளைகளைப் பாக்கியங்களாகப் பெற்றிருக்கின்றார். 'என் வலது கையைப் பிடித்து தாங்குவீர், உம்முடைய யோசனையின்படி என்னை நடத்தி கடைசியிலே என்னை மகிமையில் ஏற்றுக்கொள்ளுவீராக' என்னும் வேத வாக்கியத்தை இவருக்கு ஆறுதலாகவும் ஜூபிலி வாழ்த்துதலாகவும் அறிவிக்கின்றோம்.



**சங்கை A. P. சாமுவேல் ஐயர்.** இவர் 1881ம் ஆூ ஜனுவரி மாதம் 7-ம் தேதி திண்டுக்கல்லுக்கடுத்த அம்மாபட்டியில் பிறந்தார். கனம் D. Bergstedt ஐயரால் ஞானஸ்நானம் பெற்று, கனம் Schad ஐயரால் திடப்படுத்தப்பட்டார். தஞ்சை, தரங்கை, சீர்காழி—இவ்விடங்களிலுள்ள நமது பாடசாலைகளில் கல்வி பயின்று செமிநேரி படிப்பையும் முடித்து, 1905ம் ஆூ உபாத்தியாயராக மாற்றப்பட்டு, உத்தமபாளையம், போடிநாயக்கனூர் என்ற இடங்களில் வேலைசெய்து வந்தார். 1910ம் வருடத்தில் ஆரம்பிக்கப்பட்ட வேத சாஸ்திர வகுப்பிற்கு இவர் முதலில் தெரிந்தெடுக்கப்பட்டும், பணக் குறைவால் இவரும் இன்னும் சிலரும் நிறுத்தப்பட்டார்கள். குருவாக தெய்வ ஊழியம் செய்வது ஆண்டவருக்குச் சித்தமில்லை என்றெண்ணி இவர் அமர்ந்திருந்தார். இவர் அறியாமலே, அதிசய தேவ நடத்துதலால் இவர் வேலை செய்த போடிநாயக்கனூரிலுள்ள ஓர் இந்து கனவான் முன்வந்து, இவர் வேதசாஸ்திர வகுப்பு படிக்கத் தேவையான ஒத்தாசை செய்வதாக வாக்களித்தார். இதையறிந்த சங்கத்தார் உடனே இவரை வேத சாஸ்திர வகுப்பிற்கு அழைத்துப் படிக்கும்படி உத்தரவளித்தார்கள். மிசியோன், சபை உதவியின்றி இவர் வேத சாஸ்திரப் பயிற்சிபெற ஆண்டவர் கிருபை செய்தார். இவர் 1914ம் வருஷம் பிரசங்கியாராக உத்தமபாளையம் மாற்றப்பட்டு, அடுத்த வருடம் குருப்பட்டம் பெற்றார். இவர் உழைத்த இடங்கள் மூன்று: உத்தமபாளையம், கோயமுத்தூர், ராயபுரம்.

உத்தமபாளையத்தில் குருவாக நான்கு வருடம் கிராமச் சபைகளில் தெய்வ ஊழியம் செய்தார். அங்கிருந்து திடீரென்று 1919ம் வருஷம் கோயம்புத்தூருக்கு மாற்றலானபோது, அதிகமாய்த் தயங்கினார். கனம் J சாந்தகிரின் அத்தியட்சரவர்கள் அவரைத் தைரியப்படுத்தி 6 மாதகாலம் வேலை செய்து பாருங்கள் என்று அனுப்ப கர்த்தர் வெகு ஆச்சரியமாய் தமது ஊழியனைப் பெலப்படுத்தி 13 வருடங்களாக அங்கே உழைக்கக் கிருபை செய்தார். நீண்டகாலம் ஒரே இடத்தில் தொண்டு புரிந்ததினால். அச்சபையின் உள்ளான புறம்பான விர்த்திக்கென்று பலதுறைகளில் செய்க்கூடியதை இவர் செய்தார், திருஷ்டாந்தமாக கோயமுத்தூர் சபை A class pastorate ஆனது, Luther League என்னும் வேதாகம கூட்டம் ஓங்கி வளர்ந்தது, ஆண்பிள்ளைகள் ஆதரிப்புப் பாடசாலை ஸ்தாபிக்கப்பட்டது; Indian Christian Hostel கட்டப்படவும் Moses Gnanabaranam Eye Hospital ஸ்தாபிக்கப்படவும் கன ஐயரவர்கள் காலஞ்சென்ற Rao Bahadur ஆரோக்கியசாமி

பிள்ளை அவர்களை அடிக்கடி ஏவினர்கள், உதகமண்டல சபைக்கு பிரத்தியேகமான ஆலயம் இல்லாத குறை நிவர்த்தியாக்கப் பட்டது.

1932ம் வூ கனம் ஆலோசனை சங்கத்தார் இவரை ராய புரத்திற்கு மாற்ற, மறுபடியும் தியக்கமுற்றார். இரண்டுமாதம் வேலைசெய்துபாருங்கள் எனக் கேட்டுக்கொள்ளப்பட்டு, பிறகு கர்த்தருடைய கிருபையால் அச்சபைக்குக் காயமான குருவாகி, கடந்த எட்டு வருடங்களாகத் தம் ஊழியத்தைச் சந்தோஷ மாய் செய்துவருகிறார்.

இவர் 1905ம் வூ பெப்ரவரி மாதம் 22ம் தேதி சௌ. ஞானமணி அம்மாளை விவாகம் செய்து, தற்சமயம் ஆறு பிள்ளை களை புத்திர சம்பத்தாக பெற்றிருக்கிறார். 'பருவதங்கள் விலகி, குன்றுகள் சாய்ந்தாலும் நம்முடைய கிருபை உன்னை விட்டு விலகாமலும், நம்முடைய சமாதானத்தின் உடன்படிக் கை சாயாமலும் இருக்கு மென்று உன்மேல் மனதுருகுகிற கர்த்தர் சொல்லுகிறார். (ஏசா 54, 10) இத்தெய்வ வார்த் தையை ஜூபிலி வாழ்த்துதலாக இவருக்கு அளிக்கின்றோம்.

திரியேகக் கடவுளுக்கே துதியுண்டாவதாக. ஆமேன் அல்லேலூயா.

Pudukotah, 17—8—40. V. G. Asirvatham

———:———

## வாலிபர் பகுதி

### உன் புஸ்தகங்கள்

நமது தற்கால ஜீவியத்தோடு புத்தகங்கள் மிகுந்த சம்பந்த முடையன. நமது தோழருக்கடுத்தாற்போல் நமது மனோதத் துவ உறுதிக்கு அவைகள் மிகவும் அவசியம். வெகு விஷயங் களைக்குறித்து நாம்தீர்ப்பு செய்வதில் இவைகளே நமக்கு உதவி யாம். தேவ பயமற்றவர்கள் எழுதிய நூற்களைப் படிப்போர் தேவ பயமற்றவராவது அதிசயமல்ல. வொல்தேர் (Voltaire) சிறு வயதில் மனப்பாடம் பண்ணிய நாஸ்தீகச் செய்யுள் அவன் மூளையைக் கெட்டிப் பிடியாய் பிடித்துக்கொண்டது; பரிசுத்த மானவைகளைப் பரிகசிக்கத் துணிகரம் கொண்டான். அதற்கு மாறாகச் செம்மையான நூற்கள் நூற்றுக்கணக்கானவர் சரித்திர த்துக்கு அடிப்படையாயின. வில்லியம் கேரியை (carey) ஒரு மிஷனரியாக்கியது ஒரு நல்ல புத்தகம். ஜான் வெஸ்லியை நல் வழியில் நடத்தியது டெய்லர் போதகரின் 'பரிசுத்தஜீவியமும்



மாணமும்' என்ற பண்புள்ள புத்தகமே. இங்கிலாந்தின் பெயர் போன போதகரின் நூற்களே ஸ்பர்ஜன் போதகரைத் தெய்வ திருத்தொண்டுக்கு நடத்தின.

பக்திப் பயிற்சிக்கான நூல்களும் பலவகைப்படும். வைராக் யம் சாதிப்பவை, காலத்துக்கேற்ற கோலம் பூண்டவை, உள்ள பக்தியையும் கொள்ளை அடிப்பன, இதில் கடைசி வகையே பெருகி வருகிறது. சுத்த வைராக்கிய புத்தகங்கள் வெகு சொற்பம். தற்சமயம் சன்மார்க்க அபிவிர்த்தி புஸ்தகசாலைகளுக் குள் செல்லுவோமானல் பரிசுத்த வைராக்கியம் நிறைந்த நூற் களைக் காண்பதரிது. விசுவாசத்தை அவிக்கும் புத்தகங்கள் எப் படியோ அவ்விடம் புகுந்து வெகு சீக்கிரம் விலையாகிவிடும்; விசுவாசத்துக் கானவையோ தூசிபடிந்து மாதக்கணக்காய் வருஷக்கணக்காய் வாங்குவோரற்றுக்கிடக்கும். புஸ்தகங்களைத் தேர்ந்தெடுப்பதிலும் ஜாக்கிரதை வேண்டும்.

நாம் உடனே உபயோகியாத புத்தகத்தை வாங்குவது சரி யல்ல. வாங்குகிறவற்றை வாசிக்கத்தவறுதே. விஷமேறியநூற் கள் என்று அறிந்தும், அவைகளை வாங்கி விருப்பமுடன் வாசிப் பது உன்னை விஷப்படுத்தும். ஜாக்கிரதையாய் வாசித்துக் கறைப் படாதவருமுண்டு.

எவ்வித தொழிலிலும் உத்தியோகத்திலும் முன்னுக்குவர வாஞ்சிப்பவன் புத்தக வாசிப்பில் பூஜ்ஜியனாய் இரான். ஆயினும் அவைகளை மட்டுமே வாசித்தல் போதாது. ஆத்தும விசாலிப் புக்குதவும் நூற்களே அவசியமானவை. சிலகாலங்களுக்கு மட் டுமே மதிப்பு பெற்று மறக்கப் பட்டுப் போனவை உண்டு. பரி சுத்த வேதமோ எக்காலத்துக்கும் தலைமுறை தலைமுறைக்கும் மாறாத சத்தியத்தைப் போதிக்கும். வேதவசனம் சன்மார்க்க அறிவுக்கும் சாஸ்திர அறிவுக்கும் திறவுகோல். ஆகையால் அதற்கு உன் மேஜையின்மேல் முதல் இடம் கொடு. வேத புத் தகத்தை அலட்சயம் பண்ணும் ஆசிரியருக்கு இக்காலத்தில் எச் சரிக்கையாயிரு. வேதத்தை உனக்கு இன்பமாக்கும் நூற்களை வாங்கி வாசித்து உன்னைப் பலப்படுத்திக்கொள். பற்பல சாஸ் திரங்களிலும் நிபுணாயிருக்கும் பண்டித சிரோமணிகள் பரி சுத்த வேதத்தின் சத்தியத்துக்குச் சாட்சி கொடுப்பதில் பின் வாங்குவதில்லை. பராபரன் ஞானிகளுக்கும் கல்விமான்களுக்கும் மறைத்துப் பாலகருக்கு வெளிப்படுத்தச் சித்தமாயிருக்கிறார். நாம் சத்தியமுள்ளவரை அறிவதற்காக அவர் நமக்குப் புத்தியைக் கொடுத்தார் என்று அறிந்திருக்கிறோம். (1 யோ. 5, 20) S. D. G.

———:———

## பத்திராதிபர் குறிப்புகள்

கடந்து போன சிலமாசங்களாக உலக சம்பவங்களைக் கொண்டு ஆண்டவர் தமது திருச்சபையோடு பேசிக்கொண்டு வருகிறார். தூங்குகிற சபைகளை எழுப்பிவிடப் பார்க்கிறார். அவருடைய வருகை வரவர சமீபமாயிருப்பதாகத் தெரிகிறது. "மனுஷனுடைய குமாரன் வரும்போது பூமியிலே விசுவாசத்தைக் கண்டு பிடிப்பாரோ" (லூக். 18:8) "மணவாளன் தாமதித்தபோதோவெனில், எல்லாரும் நித்திரை மயக்கமாகித் தூங்கி விட்டார்கள்" (மத். 25:5) என்னும் வாக்கியங்களை நாம் மறந்துவிட்டோமா? சபை ஊழியம் நடப்பதற்காகப் பணம் சேர்ப்பது அவசியமே. ஆயினும் விசுவாசமில்லாத சபையார் பணங் கொடுப்பதில் உற்சாகங் காட்டமாட்டார்கள். தேவ வசனமொன்றே நமது சபைகளை விசுவாசத்தில் உறுதிப்படுத்தக்கூடிய எத்தனம். வேத ஆராய்ச்சிக்கூட்டங்களும், ஜெபக்கூட்டங்களும் நமது சபைகளில் நடக்க நாம் கவலை யெடுத்துக் கொள்ளுகிறோமா? தனி ஜெபமும், வேதத்தியானமும் நம்மில் ஒழுங்காய் நடைபெறுகிறதா? ஆங்காங்குள்ள சபைத்தலைவரும் ஊழியரும் சபைகளில் புத்துயிர் உண்டாகக் கவலை யெடுத்துக் கொள்ளாவிட்டால் சத்துரு ஜெயங்கொள்ளுவான். வேதத்தியானத்திலும், ஜெபத்திலும், உறுதியாய்த் தரித்து, நம்மைத் தேடிவருகிற ஆண்டவரைச் சந்தித்து, அவர் நமக்குச் சொல்வதை அறிந்துகொண்டு, அவர் காட்டும் பாதையில் கீழ்ப்படிந்து செல்வோமாக. அப்போதுதான் நாம் போரில்ஜெயித்து திருச்சபையின் ஜீவனுள்ள அவயவங்களாய் விளங்குவோம்.

### மதிப்புரை

யோபிஞகம வியாக்கியானம்: மகாகனம் V. S. அசரியா அத்தியக்ஷரவர்கள் 100 பக்கங்களுள்ள இந்நூலை இயற்றியிருக்கிறார். சன்மார்க்கர் துன்புறுவதேன், துன்மார்க்கர் செழித்திருப்பானேன் என்ற கேள்விகளுக்குப் பலவித விடைகள் இவ்வாகமத்திலிருப்பதை விஸ்தரித்து, புதிய ஏற்பாட்டுப் பேதா பேதத் திருஷ்டாந்தங்களுடன் தமிழ்த் திருச்சபைக்கு ஈவாக அளித்த அத்திக்ஷரவர்களுக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம். 31 அத்தியாயங்களுள்ளதாய் சிறந்த தமிழ் நடையில் S. P. C. K. சங்கத்தாரால் பிரசுரிக்கப்பட்ட இந்நூலை சென்னை C. L. S. சங்கத்தாரின் புஸ்தகசாலையில் 6 அணுவுக்கு வாங்கலாம். டோர்ணகல் அத்தியக்ஷர் இயற்றிய இவ்வியாக்கியான நூலும், கிறிஸ்தவ ஈகை என்ற நூலும் தமிழ் கிறிஸ்தவ வீடுகளில் அத்தியாவசியம் வாசிக்கவேண்டியவை.

———:———



## வீடு

கட்டடங்கள் பல உள. எனினும் கட்டடம் எல்லாம் வீடாகாது. கோயில் என்ற கட்டடம் தெய்வ வீடென்பார். அரண்மனை என்ற கட்டடம் அரசர் வீடாம். மனுஷன் வசிக்கும் வீடோ வெறும் இல், கேவலம் மனை. வெறும் இல் கோயில் ஆகும் இல்லாளால், வெறும் மனை அரண்மனையாகும் மனைவியால். கச்சேரி கட்டடம் வாதி பிரதிவாதியின் வீடு, தாக்கும் குதர்க்கம் நடக்கும் கூடம். இது வீடாமோ?—சிறைசாலையும் ஒருகட்டடம். தன்மனம்போல் நடந்தவன், மற்றவர் மனம்போல் நடக்கப்படிக்குமிடம். —பிள்ளைகளுக்குப் பிரியமாக வேண்டிய கட்டடம் பள்ளிக்கூடம். குரு சிஷர் சந்திக்கும் இடம். மற்றோருக்கு இங்கே வேலை இல்லை. இரும்படிக்கு மிடத்தில் ஈக்கென்னவேலை என்பார் பெரியோர். —வழிப் போக்கர் தங்கும் கட்டடம் சத்திரம். அந்நியரோடு தங்கவேண்டும், சொற்ப சமயமே தங்கக் கூடும். இது வீடாவதெப்படி? ஆஸ்பத்திரியும் ஓர் கட்டடம். வியாதியஸ்தர் நிறைந்த ஸ்தலம். சுகவாளிக்கு இங்கே வேலை இல்லை. பிணியாளியும் பரிகாரியும் ஒத்துப் பிழைக்கும் இடம் ஆஸ்பத்திரி.— ஆடவர், பெண்டிர், பெரியோர் சிறியோர்களித்தோடும் கட்டடம், நாடகசாலை, சினிமா மஹால். இங்கே ஆடும் படம் பார்க்கலாம், பாடும் படம் பார்க்கலாம்.

நம்மில் மிகுதியானோர் நெடுங்காலம் நித்திரை செய்யும் கட்டடம் கல்லறை. இது மரித்தோர் தங்குமிடம். காலம் வரும் முன்னே அங்கே யார் போவார்? 'எனினும் துர்க்குணம் நிறைந்த மனிதன் மரித்தோர் எலும்பு நிறைந்த கல்லறை என்றார் என் ஐயன். இவையாவும் வெறுங் கட்டடங்களேயன்றி வீடாமோ? எனினும் வீடு கோயிலாகும் ஆண்ட பொருளை அறிந்தோர் அதில் வசித்தால், பக்தி மலர் சூட்டும் பூசாரிகள் அதில் இருந்தால். வீடு அரண்மனையாகும், பரஸ்பர அன்பு அவியாது அனல் மூட்டும் குடும்பம், போதுமென்ற மனம் என்றும் படைத்த குடும்பம் இருக்கும் வீடு.—குற்றமற்ற ஆணில்லை, மாசற்ற பெண் இல்லை. எனினும் ஒருவர்மேல் மற்றவர் குற்றம் பிடிக்கப்பார்க்கும் குடும்பம் வசிக்கும் இடம் வீடோ, கச்சேரியோ.—பெண்ணை அடிமை கொள்ளும் ஆணும் ஆணின் மேல் அதிகாரஞ் செலுத்தும் பெண்ணும் வாழும் இடம் சிறைசாலை யென்றால் பொய்யோ?

வேலைத்துறையும் வேடிக்கை ஸ்தலமும் தன் ஆவிக்கின்பமாகவும், பெண்ஜாதி பிள்ளைகள் தங்கிய இடம் எட்டிக்கசப்பாகவும் எண்ணுவோனின் வீடு, வீடா சத்திரமோ? நாடகம் பார்க்க சினிமாவுக்குப்போவானேன் இராக்கண் விழிப்பானேன்.

டிக்கட்டுக்கு காசு செலவழிப்பானேன். டிக்கட்டில்லா நாடகம், கட்டுக்கதையல்ல. சச்சரித்திர சினிமா பகலாட்டம் உன் வீட்டிலே, என் வீட்டிலே அனுதினமும் நடக்கையில். நானும் நீயும் இருக்கும் இடம் சினிமா மஹாலே யன்றி வீடன்றே.

பின்னை வீட்டை வீடாக்குவதென்ன? மனைவி என்பார். மனைவி வீட்டின் கேந்திரம், உலக சரித்திரத்தின் கேந்திரம், மனுஷ ஆத்ம சரித்திரத்தின் கேந்திரம் ஏவாளன்றோ? சூரியன் கேந்திரமாக பூமி அதைச் சுற்றிவரும், பூமியை கேந்திரமாகக் கொண்ட சந்திரன் பூமியையே சுற்றி ஓடும். கேந்திரத்தில் வாய்ந்த ஆகிருஷ்ண சக்தியே இதற்குக்காரணம். குடும்பத்தின் கேந்திரம் மனைவி, மனைவியின் கேந்திரம் பரமன். மனைவியென்ற முனையிலே அன்பென்ற பொன் கம்பியால் கட்டப்பட்ட கணவனோ, பிள்ளைகளோ அன்புகட்டு அறுமட்டும் கேந்திரத்தைச் சுற்றியே நிற்பார். அன்புப்பிரமாணத்தின் வசப்பட்டிருக்கு மட்டும் யாவும் நன்று நன்றே. அவ்வன்புபொறுக்கும் அன்பு, சகிக்கும் அன்பு, நம்பும் அன்பு, தன்னை மறந்து உழைக்கும் அன்பு. அந்த வீடே வீடு. அவ்வீட்டாரின் பாக்கியம் பெரிது. செல்வாக்கு சிறக்கும், மகிமை பெருகும். அவ்வீட்டாருக்கு அவ்வீடு கேட்டதை எல்லாம் கொடுக்கும் கற்பகத்தரு.

உலகத்தின் கடு வசனமாம் கானலில் பட்ட விடத்து நிழல் தரும் செஞ்சோலை. அயலாரின் அவமானம் அசட்டையாம் கொடும் பனிக் காற்றில் நடுங்குவோன் நாடும் அருந்தணல் கோட்டி. பகை விரோதமென்ற கொடிய அம்புக்குத் தப்ப அடைக்கலக் கோட்டை. வரண்ட வனாந்தர ஜீவியத்தின் ஒன்றான நந்தவனம். ஓயா உழைப்பால் தளர்ந்தவன் திடன் அடையும் அரிய ஆரோக்கிய ஸ்தானம். காரிருளில் கலங்கும் மாலுமிக்கு வழிகாட்டும் உயர் ஒளி ஸ்தம்பம். அமிழ்த்துங் கவலைகளை நிர்மூலமாக்கும் நிகரற்ற ஔஷதம்.—குடும்பத்தவரின் கண்ணீரைத் துடைக்கும் கை. பாரத்தைச் சுமக்கும் தோள். சகலத்தையும் சீர் தூக்கிப்பார்க்கும் கபடற்ற கண். மனத்தைப் பூரிப்பிக்கும் செந்தாமரை முகம். புலம்பலையெல்லாம் பொறுமையாய்க் கேட்கும் காது. இன்னிசைய பாடல் பாடும் செவ்விதழ் வாய்.

பெறப்போகும் நித்திய வீட்டுக்கு உதாரண வீடு, வரும் இன்பத்தின் முன்ருசி. மோக்ஷமாக வேண்டிய இவ்வீட்டை நரகமாக்கினவருக்கு வேறு மோக்ஷமும் வரப்போமோ? வீடற்ற ஆண்டி பலர். என் ஆண்டி குருவுக்கு வீடில்லை. எனக்கும் வீடில்லை.





"நீர் தங்கிடும் வீட்டில், சுவாமி, நீர் தங்கிடும் வீட்டில், எல்லாம் நிறைவே, குறைவுண்டாமோ பத்தா, நின்னைவிடமாட்டேன்" என்று பக்தர் பாடலானர்.

வீடு பெற்ற கிறிஸ்தவரே, உமது வீடு வீடா.

"ஆண்டி"

———:———

## திருச்சபை வர்த்தமானம்

அழகிய நல்லூர் விருதுநகர் வட்டத்தைச் சேர்ந்த கிராமங்களிலொன்று. இதின்பழையபெயர் குட்டுலொட்டி. இங்கே சங். J. Sandagren ஐயரால் சபை ஸ்தாபிக்கப்பெற்று இப்போது ஏறக்குறைய பத்து பன்னிரண்டு கிறிஸ்தவக் குடும்பங்கள் இருக்கின்றன. இக்குடும்பங்கள் தினக்கூலிவேலைசெய்து பிழைப்பவைதான். என்றாலும் இக்குடும்பங்களிலுள்ள பெண்களும், ஆண்களும் தங்கள் நிலைமைக்குத்தக்கபடி உற்சாகங் காட்டுகிறவர்கள். ஞாயிற்றுக்கிழமையில் வழக்கம்போல் ஆராதனை நடந்து வருகிறது. ஞாயிற்றுக்கிழமை ராத்திரியில் சபையாருக்கு வேத ஆராய்ச்சிக் கூட்டம் ஒன்று நடந்து வருகிறது. அதில், பரி. மார்க்கு சுவிசேஷத்தை யாவரும் வாசித்து சற்று நேரம் அந்த பாகத்தை தலைவர் விவரித்துச் சொல்லி கேள்விகள் கேட்டபின் ஜெபித்து முடிப்போம். புதன்கிழமைதோறும் சபையார் வீடுகளில் ஜெபக் கூட்டம் நடந்து வருகிறது. இதில் சபையார் யாவரும் கலந்து கொள்வார்கள். அப்போஸ்தலர் வர்த்தமானத்தில் ஒவ்வொரு பாகம் முறையே வாசித்து விவரித்துக் கூறப்படுகிறது. பக்திக்குரிய புதிய கீர்த்தனைகளை சபையார் கற்றுக்கொள்ளுகிறார்கள். வெள்ளிக்கிழமை மாலை ஆராதனையும் நடைபெற்று வருகிறது.

எங்கள் ஆலயக்கட்டிடம் உலைமானமாயிருப்பதால் கட்டடத்திற்கு ஒரு நிதி திரட்ட எண்ணி பெண்கள் பிடியரிசிக் காணிக்கை மாதந்தோறும் சேர்த்துவருகிறோம். இது ஒருசிறு முயற்சிதானென்றாலும் ஆண்டவர் இதை நிச்சயமாகவே ஆசீர்வதிப்பார் என்று நம்புகிறோம். தங்கள் தங்கள் வீடுகளில் எந்த தானியம் அதிகமாய் உபயோகிக்கிறோமோ அதையே காணிக்கையாகக் கொண்டுவருவோம். இது ஒரு நல்ல பழக்கமாயிருக்கிறது. இவ்விதமாக அழகியநல்லூர் சபையை ஆண்டவர் இன்னும் மென்மேலும் உயர்ந்த நிலைக்குக் கொண்டுவரும்படி யாவரும் எங்களுக்காக ஜெபிக்கக் கேட்டுக்கொள்ளுகிறோம்.

அழகியநல்லூர், 3—8—40

ஞா. ஜெயமணி

2. சீர்காழி கிறிஸ்தசிஷ்ய சங்கத்தின்சார்பாக ஆகஸ்ட் மீ 2-ம௳ மாலே 5-மணிக்குச் சீர்காழியைச்சேர்ந்த தாடாளங் கோயிலில் முதியோர்க்கென்று ஓர் ராப்பாடசாலே ஸ்தாபிக்கப் பட்டது. திறப்புவிழாவில் சீர்காழி தாசில்தார் ஸ்ரீ. ராஜரெத்தினம் B. A. அவர்கள் தலைமைவகித்தார்கள். கனம் J. E. ஜூபிலிபிரசங்கியார் ஜெபிக்க, சீர்காழி ரேஞ்ஜ் பாடசாலேகளின் டெபுடி இன்ஸ்பெக்டர் ஸ்ரீ. T-P. ஸ்ரீனிவாசன் B. A., L. T. அவர்கள் "முதியோர் கல்வியும் பயனும்" என்ற பொருளின் பேரில் இனிது சொற்பொழிவாற்றினர்கள். சங். P. Knutson ஐயரவர்கள் ஜெபித்து ஆசீர்வாதங்கூற, மங்களகீதத்தோடு திறப்புவிழா முடிவுபெற்றது. இவ்வேலை தொடர்ந்து நடக்கவும், இதினுல் கிறிஸ்துவின் நாமம் மகிமைப்படவும் யாவரும் ஜெபிக்கக் கோருகிறோம்.

20—8—40. S. B. காலேப்

———:———

# DANISH MISSION

Editor: Rev. Gna. Vedakan, Cuddalore N. T.

## பதிப்பாளர்

### புதிய உலக அமைப்பு—(i).

"பின்பு, புதிய வானத்தையும் புதிய பூமியையும் கண்டேன்".—வெளி. 21. 1. இப்பூமியில் நம்மைச் சுற்றிலும் நடக்கும் யுத்தம், அதின் அகோர நஷ்டம், அழிவு, ராஜ்யங்கள் நிர்மூலமாக்கப்படுதல், நாகரீக அம்சம் சகலமும் ஒழிதல், அதர்மமும் அநீதியும் அக்கிரமும் செழித்தல், அவபகதியுடன் அவிசுவாசம் நிலைத்திருத்தல்—இவைகள் நம்மைச் சிந்திக்க ஏவுகிறது. மனுஷ குமாரன் வரும்போது விசுவாசத்தைக் காண்பாரோ! மேன்மையும் மகத்துவமுமானது என்று அங்கீகரிக்கப்பட்ட சகலமும் தலைகீழாய்ப் போவதைப் பார்த்து கவலையுறுவோம். "பழையவைகள் ஒழிந்தன, எல்லாம் புதிதாயின".—தற்போதிருக்கும் நிலைமை மாறி, புது அமைப்பு ஒன்று பக்குவப்படுகிறது என்ற நம்பிக்கை ஒன்றுதான், நம்மை தற்கால பயம், கிலேசம், அவதி, கடூரம் முதலியவையிலிருந்து நம்மைக் காக்கும்.



நடக்கும் பயங்கர யுத்தமும், அது இம்மட்டும் மக்களுக்கு விளைத்திருக்கும் கடுமையையும், முன்னேறி வரும் ஜெர்மன் யுத்த பலத்தையும் காணும்போது, பரம கடவுள் தமது சித்தத்திற்கும் மனுஷ சித்தத்திற்கும் உள்ள பேதத்தைக்காணும்படி வெளிப்படுத்துகிறார். தேவ சிநேகமும், பராமரிப்பும், ரட்சிப்பும் அவருடைய இயற்கை திருச்செய்கைகளாயிருக்க, மனித பகையும், அழித்தலும், சிறைப்படுத்தலும் மனித துர்க்கிரியைகளாக நிலைத்திருக்கிறது. மனித துர்கிரியைகளைக்கொண்டே பரம கடவுள் அவைகளை நிர்மூலமாக்கி, தமது கிரியைகளை ஸ்தாபிப்பார். மனிதருக்கு உண்டாகும் நஷ்டம் நிர்ப்பந்தம் மூலமாயும் அவருடைய சித்தம் நிறைவேறக்கூடும். ஆகவே, துர்பாக்கிய சம்பவங்களிலேயும் கடவுள் கிரியை செய்கிறவராகவே காணப்படுவார். கல்வாரியின் பரிதபிக்கத் தக்க நிலையில் மனித அகோர இழிவைக்கண்டனம் செய்வதுபோல், தற்போதுள்ள கடூர சம்பவங்களில் மனித அகோர இழிவான தன்மையைக் கண்டனம் செய்யலாம். இழிவை உபயோகித்து ரட்சிப்பை உண்டுபண்ணினது போல், இப்போதும், புது பூமி உண்டாகிறதென்று நம்புவோம்.

உலக ராஜ்ய எல்லைகள் மாறி, ஜனசேதம் பட்டண அழிவுகள் ஆகி, செல்வாக்கு குறைந்தது, பணமெல்லாம் புகையாக மாறி சீர் குலைந்து போகும்போது, சகோதரத்துவம் பெருகவும், சம உரிமை சுதந்தரம் கிடைக்க, தற்பிரதிஷ்டையும் சுயவெறுப்பும் செழிக்க, பொதுவுடமை சித்தாந்தம் மேம்பட்டதாக யிராமல் பிறர் நலம் தேடும் தியாக தெய்வ குணமே மனிதவர்க்க குணமாக ஏற்பட்டு, உலக முழுவதையும் ஆதாயப்படுத்தும் மேற்கோள் நீங்கி, தன் ஜீவனையே ஆதரிக்கும் அநுபவத்தில் மனிதர் நிலைத்திருக்க, "புதிய வானம் புதிய பூமி" அமைக்கப்படும். இந்த அமைப்புக்காகவே பக்தரின் ஜெபம் தேவை. "உமது ராஜ்யம் வருவதாக".

## செய்திகள்

**குஷ்டரோகிகளுக்காக பிரார்த்தனை செய்யும் நாள்:** ஆகஸ்டு 25௳, குஷ்டரோகிகளை நினைத்து ஜெபிக்கவும் காணிக்கை சேர்க்கவும் நினைப்பூட்டப்படுகிறோம். "குஷ்டரோகிகளைச் சுகமாக்குங்கள்," என்பது சீஷர்களுக்கு ஆண்டவர் கொடுத்த திட்டமான கட்டளை. மிகுந்த கருணையுடன் அவரே அவர்களை விசேஷித்த விதமாக குறிப்பிட்டு குணமாக்கினர். இந்தியாவிலுள்ள கிறிஸ்தவ மிஷன்கள் 7,500 குஷ்டரோகிகளை விடுதிகளில் வைத்தும், வியாதி தொடாதபடி 800 பிள்ளைகளைப்

பிரித்துவைத்து காப்பாற்றியும், 10,000 மேலாக வெளி பிணியாளிகளுக்கு மருந்து கொடுத்தும் வருகின்றனர். சபைகளின் பொதுக் காணிக்கையும் ஒவ்வொருவர் உதவியும் சபைப்போதகர் மூலமாய் கனம் A. Donald Miller, Purulia, Biharக்கு அனுப்பவும்.

N. M. S. சங்க ஞாயிறு: அக்டோபர் மீ 13உ திரித். 21ம் ஞாயிறு அகில இந்திய சங்க ஞாயிறாக ஆசரிக்கப்படும். டேனிஷ் மிஷன் சபைகள் அட்வெண்டின் 1 ஞாயிறு, டிசம்பர் மீ 1உ ஆசரிக்க குறிப்பிட்டிருக்கிறது. பண முடையிலும் எப்போதும் போல், நமது சபைகளின் உற்சாகம் குறையாதென்றே எதிர்பார்க்கிறார்கள்.

மதனபள்ளி ஆரோக்கியவரா ஆஸ்பத்திரி: ஜூலை மீ கடைசியில், மதனபள்ளியிலுள்ள க்ஷயரோக ஆஸ்பத்திரியின் 25-வருஷ முடிவு வெள்ளி விழா, சங்கை ராகேஷப்பர் துரை அவர்கள் தலைமையில் கொண்டாடப்பட்டது. இவ்வாஸ்பத்திரியின் ஸ்தாபகரான டாக்டர் பிரிமாட் முல்லர் துரை பெயரால், வியாதிஸ்தர்கள் ஓய்வு நேரங்களை உற்சாகமாக கழிக்க, (Recreation Hall) ஒன்று 30 ஆயிரம் ரூபாய் செலவில் கட்டப்பட்டு திறக்கப்பட்டது. இக்கட்டிடம் திறந்துவைத்த கவர்னர் மந்திரி கனம் ஜி. டி. போக் அவர்கள் சொற்பொழிவில், "ஆரோக்கியவரம் கிறிஸ்தவ நாகரீக உண்மைகளுக்கு ஓர் நேர்த்தியான திருஷ்டாந்தமென்றும், கடந்த 25 வருடங்களின் ஊழியம், ஜீவியத்தின் சாஸ்வத உயர்வில் நமது விசுவாசத்தையும் கொள்கைகளையும் பலப்படுத்துகிறது" என்றும் குறிப்பிட்டார்—டாக்டர் பிரிமாட் முல்லர் துரை வந்திருந்த தோழருக்கு பதிலளிக்கையில், "இந்த ஸ்தலம் நாங்கள் செய்த ஊழியத்தைப் பாராட்டி நன்றியின் அடையாளமாகக் கட்டப்பட்டது என்று அறிகிறோம். ஆனால் நான் ஒருவருடைய நன்றியை எதிர்பார்க்கவில்லை. நோயாளிகளுக்கு ஊழியம் செய்வதே என் கடமை" என்று கூறினார்.

25 வருடங்களுக்குள், தற்போதுள்ள 300 ஏக்கருக்கு விஸ்தீரணமான இடம், காலஞ்சென்ற டாக்டர் L. R. ஸ்கட்டர், சங். ராகேஷப்பர் துரை, டாக்டர் ஹார்ட் அம்மை, இம்மூவர் ஜெபித்து தேவ நடத்துதலின்பேரில் தெரிந்துகொள்ளப்பட்ட இடம். இங்கு தற்போது நிறைந்துள்ள கட்டிடங்களும், பாதைகளும், பூந்தோட்டங்களும், மின்சார விளக்குகளும், நோயாளிகளும் ஏனையவரும் நிறைந்திருப்பது ஒரு சிறு நகராகவே தோன்றுகிறது. ஏசா. 35ன் படி, "வனாந்தர





மும் வறண்ட நிலமும் மகிழும், கடுவெளி களித்து லீலிபோல் பூக்கும். அது மிகுதியாய்ச் செழித்துப் பூத்து ஆநந்தக் களிப்புடன் பாடும்"—நிறைவேறியிருக்கிறது. 11 மிஷன்கள் கூட்டாக உதவி செய்கிறதோடு, சர்க்கார் உதவியும், பெரும்பாலும் இத்தேச செல்வந்தரின் பேருதவியினாலும் நடத்தப்பட்டு வருகிறது. ஆரம்பத்தில் 40 ஆயிர ரூபாய் வருஷ செலவிலிருந்து இப்போது அநேக லட்ச செலவில் தற்கால வைத்திய முறை கையாடப்பட்டு நடந்து வருகிறது. எளிய ஆரம்பத்திலிருந்து இந் நிலைக்கு கொண்டு வந்திருக்கும் நமது கண்ணியத்திற்குரிய கனம் டாக்டர் பிரிமாட் முல்லர் நீடூழி வாழ்க! இவர் தற்போது அகில இந்திய க்ஷயரோக சிகிச்சைக்கு சர்க்கார் பதவியில் கமிஷனராக டில்லிமா நகரில் இருக்கிறார். இவரது புதல்வர், ஜோகான்னஸ் முல்லர் இவ்வாஸ்பத்திரியில் உதவி டாக்டராக இருக்கிறார்.

நமது தேச சேய்தி: வைஸ்ராய் பிரபு, சென்னைக்கும் உதக மண்டலத்திற்கும் விஜயஞ்செய்து வட இந்தியா திரும்பியதும், இந்தியாவின் சுதந்திரக் கோரிகைக்கு பிரிட்டிஷ் சர்க்காரின் பதிலை வெளிப்படுத்தினர். அதில் குடியேற்ற நாட்டு சுதந்திரம் யுத்த முடிவில் கொடுப்பதாகவும், தற்போது வைஸிராயின் நிர்வாக சபையில் இன்னும் சிலருக்கு, (அதாவது, கட்சிப் பிரதி நிதிகளுக்கும்) உடனே உத்தியோகம் கொடுப்பதாகவும், மத்திய யுத்த சபை அமைப்பு ஒன்று ஏற்படுத்துவதாகவும், யுத்தம் முடிந்தபிறகு, இந்தியாவில் அரசியல் அமைப்பைப் புனராலோசனை செய்ய ஒரு வட்ட மேஜை மகாநாடு கூட்டப்படும் என்றும் கூறினர். இதிலுள்ளவை காங்கிரஸ் அபிமானிகளுக்கு பிடித்தமில்லை. மற்றவர்களுக்குத் திருப்தியே. தற்போது, இவ்விஷயம் பெரிதல்ல, யுத்தத்தை நல் முடிவுக்கு கொண்டுவர வேண்டுமென்பதே நமது முதல் கடமை என்று பலர் அபிப்பிராயப் படுகின்றனர்.

இதுவரைக்கும் புறத் தேசங்களிலிருந்து இறக்குமதியான சாமான்கள் இந்தியாவிலேயே தயாரிக்கும்படி சர்க்கார் உத்தரவிட்டிருக்கின்றனர். இது வேலையில்லா அநேகருக்கு பயன்படும். இந்தியாவின் மூலம் பொருட்களை ஆராய்ச்சி செய்யவும், அவைகளை உபயோகிக்கவும், பொருளாதார நிலைமையை உயர்த்தவும் கூடும். மற்ற நாடுகளுக்கு நமது பொருள்களும் போகும். உதாரணமாக, மணிலாப் பயிறு இதுவரையில் மார்செய்ல்ஸ் துறைமுகத்திற்கு ஏற்பட்டது. இப்பயற்றின் மூலமாய் ஐரோப்பாவில் செய்யப்பட்ட சோப், பிஸ்கோத்து, பலவித எண்ணெய், மிட்டாய், மருந்து, முதலியவைகளை கூடலூர் O. T.

யில் ஸ்தாபித்திருக்கும் ஓர் யந்திரசாலையில் இனி செய்ய ஒழுங்காகியிருக்கிறது.

இத்தாலியர் ஆப்பிரிக்காவிலுள்ள பிரிட்டிஷ் சோமாலிலாந்தை பிடித்துக்கொண்டிருப்பதால், இந்தியாவுக்கும் எதிரிகள் வரக்கூடும் என்று இந்திய பாதுகாப்பு சேனையை அதிகரிக்க முயற்சி நடக்கிறது. சென்னை சர்வ கலா சாலை, அண்ணாமலை சர்வ கலா சாலை மாணவர்களில் ஆண்களுக்கு யுத்த பயிற்சியும், பெண்களுக்கு நர்ஸ் வேலையும் அப்பியாசிக்க வேண்டுமென்று தீர்மானம் நிறைவேறியிருக்கிறது. இந்திய சர்க்கார ஏற்றுக்கொள்ளும் போது அமுலுக்கு வரும். கலாசாலைக் கல்வியுடன் இப்பயிற்சியையும் சேர்த்து முடிப்பது கூடாத காரியம் என்றும், இவர்கள் எக்காலத்தில் தேறி, தற்போதுள்ள ஆபத்துக்கு உதவக்கூடும் என்றும் சிலர் சந்தேகிக்கின்றனர்.

இந்திய கவி ரவீந்தர நாத் தாகூர் பெரியார்க்கு, ஆக்ஸ்போர்ட் சர்வ கலாசாலையிலிருந்து டாக்டர் (பண்டிதர்) கௌரவ பட்டம் பல மேதாவிகள் சாந்திநிகேதனில் கூடிய சபையில் அளிக்கப்பட்டது. அப்போது, தாகூர் பண்டிதர் சொன்னதாவது, "அந்தகாரத்திலும் அசாத்தியத்திலும் அதிசயத்திலும் அமிழ்த்தப் பட்டிருக்கும் மனுஷ வர்க்கம், பரிபூரணத்திற்கு இன்னும் உயரவேண்டும். தற்போதுள்ள இருள் சக்திகள்சத்தியத்தின் வெளிச்சம் தோன்றும்பொழுது அகன்று போம். புத்தர், இயேசுக்கிறிஸ்து, முதலியோர் மகத்துவமுள்ள வருங்காலத்தை நிச்சயப் படுத்துகின்றனர். மனுஷ வர்க்கத்திற்கு இன்னும் நம்பிக்கையுள்ளதென்று அவர்களின் நற்செய்தி நிரூபிக்கின்றது! ஆகையால் விசுவாசத்துடன் அசத்தியத்திலிருந்து சத்தியத்திற்கும் இருளில் இருந்து வெளிச்சத்திற்கும் எங்களை நடத்தும் என்று பிரார்த்திப்போமாக."

மைசூர் மகாராஜா மரணம்: மைசூர் மகாராஜா ஸ்ரீ கிருஷ்ணராஜ உடையார் தமது 57-வது வயதில், ஆக. 3உ 35வருட ஆட்சி புரிந்து காலஞ்சென்றார். இந்திய சமஸ்தானாதிபதிகளில் இவர் சிரேஷ்டர். தம்முடைய ஒழுக்கம், சீலம், தெய்வபக்தியில் சிறந்தவர். மைசூர் சமஸ்தானம் பொருளாதாரத் துறையிலும் கைத்தொழில் வளர்ச்சியிலும் இப்போது முன்னிலையில் நிற்பதற்கு இவரது முயற்சியே காரணம். ராஜயத்திலுள்ள கிறிஸ்தவர்களுக்கு, கத்தோலிக், வெஸ்லியன், தமிழ் சபையாருக்கு அதிக உதவி புரிந்தே வந்தவர். இவர் பிரேதசேம சடங்கின் முடிவில் சமஸ்தான ஏழைகளுக்கு 75 ஆயிரம் செலவில் அன்ன வஸ்திரம் அளித்தார்களாம். இவரது தம்பி பிள்ளை ஸ்ரீ ஜெயச் சாமராஜேந்திர உடையார் பட்டத்துக்கு வருகிறார்.

யுத்த செய்தி :—ஆகஸ்டு 15ல் யுத்த முடிவுபெற்று, உலகத்திற்கு சமாதானம் கூறுவோம் என்ற ஹிட்லர் மகான் பிரிட்டனில் தம்முடைய படை கால் வைக்குமுன், விமான வெடிகுண்டுகளினால் பிரிட்டிஷ் கப்பல்களையும் பட்டாளங்களையும் அழித்து ஜனங்களுக்கு பலவித நஷ்டம் உண்டு பண்ணி ஒருவித பீதி உண்டு பண்ண முயற்சிப்பவராக 100 கணக்கிலும், 1000 கணக்கிலும் யுத்த விமானங்களை அனுப்பிக்கொண்டேயிருக்கிறார். பிரிட்டிஷ் விமானிகள் அதிக வீரத்தோடு எதிரி விமானங்களுடன் ஆகாயத்தில் போர் புரிந்து, வீழ்த்துவதும் தாக்குவதுமாயிருக்கின்றனர். கடந்த சில நாட்களில் வீழ்த்தப்பட்ட ஜெர்மன் விமானங்கள் 800க்கு மேலாம். இன்னும் ஏராளமாக அதிக பலத்தோடுதான் ஜெர்மன் விமானங்கள் வரும். பிரிட்டிஷார் எவ்வளவு நஷ்டம் வந்தபோதிலும், விமானங்களை எதிர்த்துக்கொண்டேயிருப்பார்கள். ஜெர்மன் விமானங்களின் கணக்கு எண்ணிக்கைக்கு அடங்காமல் ஏராளமாயிருக்கிறதாம். ஒரு விமானம் சுமார் 75 ஆயிரம் ரூபாய். அந்த விமான ஓட்டியின் பெரும்பாலும் வாலிபர். குறைந்தது 50 ஆயிரம் ரூபாய் செலவில் பயிற்சி பெற்றிருப்பார்கள். ஒரு விமானத்தில் தூக்கிச்செல்லும் வெடி குண்டுகள் சுமார் 20 ஆயிரம் ரூபாய். ஒரு விமான குண்டுகள் மூலம் ஏற்படும் நஷ்டம் சுமார் 10 கோடி ரூபாய் வரையிலிருக்கும். அப்படியானால் விமான பிரயோகத்தினால் ஏற்படும் பொருள் நஷ்டம், உயிர் அழிவு, மற்ற சேதங்களை என்னென்று சொல்வது.

ஏமாற்றுப் பிரசங்கி காவல் தண்டனை : ஸ்ரீராம் நாயுடு என்று மறு பெயர்கொண்ட சத்தியப் பிரகாசம்தான் புதிய கிறிஸ்தவரென்றும் பிரசங்கி யென்றும் சொல்லி போதகர்மாரையும் பரோபகாரிகள் அநேகரையும் ஏமாற்றி உபசரணை பெற்று, சமயம் வாய்க்கும்போது அவர்கள் வீட்டின் பொருள்களை திருடிப்போவதுண்டு. இவர் ஜனவரி-மீ கூடலூர் போதகர்வீட்டில் திருடியபின், மதுரை மேற்குவாசல் கனம் செல்லையா போதகரை ஏமாற்ற முயற்சிக்கையில், அவர் விழிப்புடன் போலீசார்வசம் ஒப்புக்கொடுக்க, குன்னூர், Y. M. C. A.யில் திருடியதற்கு 2 வருஷ கடுங்காவலும், கூடலூரில் திருடியதற்கு 3வருஷ கடுங்காவலும் 3வருஷ போலீஸ் கண்காணிப்பு தீர்ப்பு பெற்றார். ஜட்ஜ் தீர்ப்பிடுகையில், "இவன் மகாபயங்கர மோசக்காரனென்றும், அன்னமிட்டாரையே வஞ்சித்த பாபியென்றும், கிறிஸ்தவ மத ஆசார பாசாங்கு செய்து ஏமாற்றிவந்தது மகா கேவலமென்றும், சீரடையக்கூடாத குணக்கேடன்" என்றும் குறிப்பிட்டார்.

Registered No. M. 1979.

ராஜகுடும்ப ஞானஸ்நானம்: ராமனுதபுர ராஜாவின் சித்தப்பார் ஆகஸ்டு 2-உ திருநெல்வேலி அத்தியட்சரவர்களால் ஞான தீட்சை பெற்றூர். பிரபுக்களின் குடும்பங்களையும் ஆண்டவர் தெரிந்து கொள்வாராக!

கண்வென்ஷன் கூட்டங்கள்: டேனிஷ் மிஷன் எல்லையில் 6 இடங்களில், ஆகஸ்டு 25-உக்கு மேல் செப்ற். மீ கடைசி வரையில், ஒக்லி சீமாட்டி, பிளாக்துரை, ஸ்ரீமான் சாமுவேல் அவர்களும் அம்மாளும், ஊழியருக்கும் சபையாருக்கும், பெண்களுக்கும் தனிக் கூட்டங்களும், பொதுக் கூட்டங்களும் நடத்துவார்கள்.

வடதுரசலூர் ஆலய வருஷோற்சவம்: ஜூலை மீ 29-தேதி கொண்டாடப்பட்டது. காலை 8-க்கு ஸ்தோத்திர ஆராதனை சபைப்போதகர் கனம் சாம்சன் ஜான் பீட ஆராதனை நடத்த, டாக்டர் அண்ணுசாமி "கேளுங்கள் கொடுக்கப்படும்" என்பதின் பேரில் எழுப்புதலாகப் பேசினுர். அதற்குப்பின் சங்கை ஆர்லிக்ஸ் துரை 3 குழந்தைகள் 5 பிள்ளைகள் 5 பெரியவர்களுக்கு ஞானஸ்நானம கொடுத்து ஆசீர்வதித்தார்.

அதற்குப் பின், சங்கை சாம்சன் போதகரால் 3 பெண் 3 ஆண் பிள்ளைகளுக்கு திடப்படுத்தல் கொடுக்கப்பட்டது. அன்று பிஷப் ஆபிரகாம் வேலைக்காக ஒரு விசேஷித்த காணிக்கை எடுக்கப்பட்டது. அன்று காணிக்கைகளாக வந்த தேங்காய், தானியவகை, பலவித சாமான் முதலியவைகளை ஆராதனைக்கும் பின் ஏலமிடப்பட்டது. அன்று அன்னுருடைய வேலைக்குச் சேர்ந்த ரூ 50—0—0ஐக். கடவுள் ஆசீர்வதிப்பாராக! எங்களது ஆலய வருட உற்சவ நாள் கடவுளின் கிருபையாலும் ஸ்ரீமதி வில்லியுண்டு அம்மையின் பிரயாசத்தாலும் மங்களகரமாக முடிவு பெற்றது. "வாங்குவதைப் பார்க்கிலும், கொடுப்பதே பாக்கியம்".

Leper Home,
Vada-Thorasalur. } Silas. J. WALTER.

---

"என் சாக்ஷிகளாயிருப்பீர்கள்" அடுத்த மாசம் வெளிப்படும்.

அரு. பத்.

